2 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 12 மதுரை 31—8—74 சனி மலர் 203

## அமெரிக்காவில் குற்றங்கள் பெருகுகின்றன

நியூயார்க், ஆக. 28—

அமெரிக்காவில் நாளுக்கு நாள் குற்ற அலைகள் பெருகுகின்றன என்று அட்டர்னி-ஜெனரல் கூறினர்.

1973ம் ஆண்டைவிட 5 சதவீத குற்றங்கள் 1974-ல் பெருகும் என எதிர்பார்க்கப்பட்டது. ஆனல் 6 சதவீதம் பெருகிவிட்டது என்றும் அவர் கூறினர். மேலும் பலாதகாரம், கற்பழிப்பு, களவு, திருட்டு போன்ற குற்றங்களின் பெருசக வேகத்தைப் பார்த்தால் 74-ம் ஆண்டின் இறுதிக கட்டம் தொல்லைமிக்கதாக இருக்கும் என்றும் அவர் தெரிவித்தார்.

## போராட்டத்திற்கு டெல்லி தொழிலாளர்கள் தயாராகிறார்கள்

புதுடெல்லி, ஆக. 27—

கட்டாயச் சேமிப்பு அவசரச்சட்டத்தை எதிர்த்து வேலைநிறுத்தம், விதிப்படி வேலை ஆகிய போராட்டங்களை நடத்த இடதுசாரிச் சங்கங்கள் முடிவெடுத்துள்ளன.

ஆகஸ்ட் 27-ல் இம்முடிவு எடுக்கப்பட்ட கூட்டத்தில் சி ஐ டி யூ, எச் எம் எஸ், ஏ ஐ டி யூ சி, ஆகிய சங்கங்களும், மத்திய—மாநில அரசு ஊழியர்களின் சம்மேளனங்களின் பிரதிநிதிகளும கலந்து கொண்டனர்.

## கொள்ளை விலைக்கு நெல்லை விற்க, நள்ளிரவில் கடத்துகிறார்கள்

## நெல் கூலி கொடுக்க மறுத்து, நிலத்தை தரிசு போடுகிறார்கள்

# தஞ்சை மிராசுகளின் கெடுபிடி தி. மு. க. போலீசும் உடந்தை

திருவாரூர், ஆக. 29—

கீழத் தஞ்சை விவசாயத்தொழிலாளர்களுக்கு, நெல்லும் பணமும் கூலி தருவதாக, கடந்த மாதம் நடந்த அதிகாரிகள், மிராசுதாரர்கள், தொழிலாளர்களின் முத்தரப்பு மாநாட்டில் உடன்பாடு செய்து கொள்ளப்பட்டது.

அப்படியிருந்தும், கூடுதல் விலைக்கு நெல்லை விற்று, கொள்ளைலாபம் அடிக்கும் பேராசை நோக்கத்துடன் பணமாகத்தான் கூலிகொடுப்போமென்றும், நெல் கூலி கொடுக்க மாட்டோமென்றும் மிராசுதாரர்கள் மறுத்து வருகிறார்கள்.

ஒப்பந்தப்படி, நெல் கூலி கேட்கும் தொழிலாளர்களைப் பட்டினி போட்டுப் பணியவைக்க— நிலத்தைத் தரிசு போடுவதும் வெளியூர் ஆட்களைக் கொண்டு வேலைவாங்குவதுமாக இருக்கிறார்கள்மிராசுதார்கள்.

உடன்பாட்டை மீறும் மிராசுதார்கள் மீது நடவடிக்கை எடுக்காமல், அவர்களுக்கு, போலீஸ் பாதுகாப்பு அளித்து வருகிறது. இதுதான் கீழத் தஞ்சையில் விவசாய வேலைகள் தேக்கமடைவதற்குக் காரணம்.

இந்த ஆண்டு, தஞ்சை மாவட்டத்துக்கு காலம் தாழ்த்தித்தான் தண்ணீர் விடப்பட்டது. அதனல் குறைந்த காலத்திற்குள் விவசாய வேலைகள் தீவிரமாகச் செய்து முடிக்கப்பட வேண்டியிருக்கிறது.

இச்சமயத்தில், முத்தரப்பு உடன்பாட்டின்படி விவசாயத் தொழிலாளர்கள் கூலி கேட்கிறார்கள் மிராதார்கள் பல இடங்களில் மறுக்கிறார்கள். அதனல், வேலைகள் தேக்கமடைந்துள்ளன.

### தேக்கத்துக்கு காரணம் யார்?

இந்தத் தேக்க நிலைக்கு காரணம் யார் என்பதை மறைத்து, தொழிலாளர்கள் மீது மாசு கற்பிக்கும் முறையில் தினமலர் நிருபர் செய்தி அனுப்பியுள்ளார். 27. 8. 74-ல் அது தினமலரில் பிரசுரமாகியுள்ளது.

அதில், "மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையிலுள்ள விவசாயத் தொழிலாளர்கள், இந்த ஆண்டில் எங்குமே ஒத்துழைப்புத் தருவது இல்லை" என்று அந்த நிருபர் எழுதியுள்ளார்.

இது விவசாயத் தொழிலாளர் மீதும்,மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட்கட்சி மீதும் தொடுக்கப்பட்ட திட்டமிட்ட அவதூறு ஆகும்.

### கோ. வீரய்யன் அறிக்கை

இது குறித்து தஞ்சை மாவட்ட விவசாயத்தொழிலாளர் சங்கத்தலைவர்தோழர் கோ. வீரய்யன் ஓர் அறிக்கை விடுத்துள்ளார்,

அதில்—

"மேட்டூரில் அணை திறக்கப்பட்டவுடன் தஞ்சைமாவட்ட ஆட்சித் தலைவர் 22—7—74-ல் ஒரு முத்தரப்பு மாநாட்டைக் கூட்டினர். அந்தமாநாட்டில், 'நெல் இருப்பவர்கள் நெல்லும், பணமுமாகத் தான் கூலி கொடுக்கவேண்டும்'— என்று உடன்பாடு ஏற்பட்டது. இது ஒன்றும் புதிய பழக்கமல்ல. எப்பொழுதுமே இருந்துவரும் பழக்கமதான்.

ஆனல் இந்த உடன்பாட்டையும், பழக்கத்தையும் மீறுவது யார்? 100 இடங்களில் தகராறுகள் ஏற்பட்டு, அங்கெல்லாம் காவல்துறையினரே தலையிட்டுத் தீர்த்தும் வைத்திருக்கிறார்கள்.

இந்த 100 இடங்களில் ஒரு இடத்திலாவது, விவசாயத் தொழிலாளர்களால் சிக்கல் ஏற்பட்டதாக அதிகாரிகளாலோ தினமலர் நிருபராலோ கூற முடியுமா?

தன்னிடம் நெல் இருந்தாலும், நெல் கூலிதரமாட்டேன், பணக்கூலியாகத்தான் கொடுப்பேன் என்று மிராசுதார்கள் சண்டித்தனம் செய்வதினல்தான் சிக்கல் ஏற்பட்டது என்பதை எவராவது மறுக்க முடியுமா?

### குறுவை நாற்றுகளை மாடுமேய விடுகிறார்

திருவாரூருக்குப் பக்கத்தில் தியானபுரத்தில் உள்ள மடப்புரம் மகாதேவ முதலியார் என்ற மிராசுதாரர் நடுவதற்காகவிட்டிருந்த குறுவை நாற்றை, மாட்டை விட்டு மேய்த்துவிட்டு, மேற்கொண்டு வேலையே துவக்காமல் போட்டு வைத்திருக்கிறார். பணக்கூலிக்குச் சம்மதி தாலதான வேலை துவங்குவேன் என்கிறார்.

இவர் வெளியூர்களுக்கு நெல் மூட்டைகளைக் கடத்தி, மூட்டை ரூ. 100 முதல் ரூ 110 வரை விற்றுக்கொண்டிருக்கிறார். இன்னும் நெல்இருக்கிறது. ஆனல், "கூலி மட்டும நெல்லாகத்தரமாட்டேன். தரிசு போடுவேன்"—என்கிறார்.

### தரிசு போடுகிறார்கள்

மன்னைத் தாலுகா குடிதாங்கி சேரியில், விட்டிருந்த குறுவை விதையை டிராக்டரை விட்டு உழுது விட்டார்கள்,

நன்னிலம் தாலுகா துக்காசி கிராமத்தில், சுப்ரமணிய சர்மா என்ற மிராசுதார், தனது 100 ஏக்கர் நிலத்தை குறுவை நடுவதை விட்டுவிட்டு, நெல்லை வண்டியிலேற்றிக கொண்டுபோய் விற்கிறார்.

நாகைத் தாலுகா கோமல் கிராமத்து நாராயணசாமி முதலியார், கூலிக்கு நெல் இல்லை என்று கூறிவிட்டு, அடுத்த நாளே 45 மூட்டை நெல்லை, மூட்டை ரூ. 95 மேனிக்கு விற்றுவிட, நெல் லாரியில் ஏற்றியபோது, விவசாய தொழிலாளகள் தடுத்து நிறுத்தியுள்ளார்கள்.

நன்னிலம் தாலுகா சல்ப்பேரி கிராமத்தில் ஒரு மிராசுதார், கூலிக்கு நெல் இல்லை என்று கூறிவிட்டு, நள்ளிரவில் நெல் மூட்டைகளைக் கடத்திய போது, தொழிலாளர்கள் பிடித்து காவல் நிலையத்தில் ஒப்படைத்துள்ளார்கள்.

இவ்வாறு எல்லா மிராசுதார்களிடமும் ஏராளமாக நெல் இருந்தும், நெல் கூலி தர மறுத்து உடன்பாட்டை உடைக்கிறார்கள்.

மற்றும் தேவங்குடி, விளாகம் போன்ற கிராமங்களில், காவல்துறை அதிகாரிகளின் முன்னிலையில், நெல கூலி தருவதாக ஒத்துக்கொண்டு போவதும் — போனபிறகு மறுப்பதுமாக இருக்கிறார்கள்.

### தேக்கநிலை ஏன்?

ஒப்பந்தப்படி நெல் கூலி கொடுக்க மறுப்பதும்— மறுக்கப்படுவதுடன் வெளியூர் ஆட்களை வைத்து வேலை வாங்க முற்படுவதும்— அவர்கள் மீது போலீஸ் அதிகாரிகள் நடவடிக்கை எடுக்கத் தயங்குவதும்— வெளியூர் ஆட்களை வைத்து வேலை செய்யும் மிராசுதார்களுக்கு போலீஸ் பாதுகாப்புக் கொடுப்பதும்தான் இன்று விவசாய வேலைகள் தேக்கமடைந்து கிடப்பதற்கு காரணமாகும். இதில் உடனே அரசு தலையிட்டு, ஒப்பந்தப்படி நெல்கூலி கொடுக்கச் செய்யுமாறு தோழர் வீரய்யன் கேட்டுக்கொண்டுள்ளார்,

## பிரதமருக்கு இளம் உள்ளங்களின் கண்ணீர்க் கடிதம்

குட்டப்பா, ஆக. 28—

ஆந்திர மாநிலத்தில் உள்ள இங்கரின் ஆரம்பப் பள்ளியில படிக்கும் குழந்தைகள் — 5 வயதிலிருந்து 12 வயது வரையான இளஞ்சிறுர்கள்— நூறு பேர் பட்டினியோடு அவர்கள் போராடும பரிதாப நிலைமையை கண்ணீர்க்காவியமாக எழுதி இந்தியஜனதிபதிக்கும், பிரதமர் இந்திரா காந்திக்கும், ஆந்திர மாநில முதல்வருக்கும் அனுப்பியுள்ளனர்.

### பெற்றோர்களுடன் பட்டினி

அவர்கள் தங்களின் கடிதத்தில் "பொருட்களின் விலைகள் தினமும உயர்கின்றன. எங்கள் பெற்றோர்கள் குடும்பத்தை நடத்த முடியாமல் கஷ்டப்படுகிறார்கள் ஒவ்வொரு மாதத்தின்பெரும்பாலான நாட்களில் பட்டினிதான. அவர்களின்இந்தகஷ்டத்தில்பங்கெடுக்கும் வகையில் இந்த இளம் வயதிலேயே நாங்கள் பட்டினி கிடக்கின்றோம்"—என்று கண்ணீர் மல்க எழுதியுள்ளனர்.

"பெரும்பாலான நாட்கள் பட்டினி. உடுத்திக் கொள்வதற்கு உடையில்லை இதனல் பள்ளிக்கூடங்களுக்குக்கூட நாங்கள் செல்ல முடிவதில்லை" என்று உண்மை நிலையை தெரிவிததுள்ளனர்.

மேலும் "குடும்பத்தை நடத்த முடியாமல் எங்கள் பெற்றோர்கள் எப்போதும சண்டை சச்சரவில் ஈடுபடுவது என்பது எங்கள் குடும்பங்களின் அன்றாட நிகழ்ச்சி, இதற்கு அடிப்படைக் காரணம் விலைவாசி உயர்வுதான. ஏனெனில் விலைவாசி உயர்வால் குடும்பச் செலவு அதிகரிததுக்கொணடே போகிறது" என்று குறிப்பிட்டுள்ளனர்.

'நாங்கள் மிகப் பெரியதும், புனிதமானதுமான இந்திய நாட்டின் குழந்தைகள், எனினும தினசரி பட்டினியால செத்து செதது மடிநதுகொணடிருக்கிறோம" என அவ்வளம பிஞ்சு உளளங்கள் துடிக்கினறன.

### ஏங்கும் இதயங்கள்

வாழ்க்கை நெருக்கடியின் காரணமாக எங்கள் பெற்றோர்கள் எங்கள் எதிர்கால நலனைபபற்றிஎண்ணிக்கூட பார்க்கமுடியவில்லை. ஆனல் நாட்டு மக்களின் நலனுக்காக நியமிக்கப்பட்டவர்கள அதிகாரிகள். அவர்கள கூட—பெரிய அதிகாரிகளாயினு சரி, சிறிய அதிகாரிகளாயினும சரி—எங்கள் மீது இரக்கமோ அன்போ கொஞ்சங்கூட காட்டுவதில்லை. எங்கள் நிலையைபபற்றி கொஞ்சங்கூட கவலைப்படுவதேயில்லை" என அவ்விளங் குழந்தைகள் அன்புக்காகவும அனுதாபத்திற்காகவும ஏங்கித தவிக்கின்றன.

### உணவு கிடைக்குமா?

கடைசியாக அக்குழந்தைகள் 'நீங்கள்தான் எங்களுக்கு உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் அளிக்க முடியும். நாங்களும் இப்பழம் பெருநாட்டின் சிறப்பான குடி மக்களாக ஆக முடியும்" என புதிய ஜனதிபதி அகமதுவுக்கும் பிரதமர் இந்திரா காந்திககும் ஆந்திர முதலமைச்சர் வெங்கல்ராவுக்கும் எழுதி தங்கள் சோகக்கடிததததை முடித்துள்ளனர்.

செய்வார்களா ஆளவந்தார்கள்?

இந்தியாவில் குழந்தைகளின் வாழ்க்கையையே பிரதிபலித்த இக்கடிதத்தைப்பற்றி கவனத்திலாவது எடுப்பார்களா?

## ராக்பெல்லரின் சொத்து எவ்வளவு?

நியூயார்க், ஆக. 30—

அமெரிக்காவில் உதவி ஜனதிபதியாக வரவிருக்கும் நெல்சன் ராக்பெல்லா மிகப்பெரிய கோடீசுவரனுகும். அவரது குடுமபச் சொத்து அல்லாமல், அவருக்கு மட்டும் எவ்வளவு சொத்து உள்ளது என்பதைப் பற்றி "டைம்" பத்திரிகை விபரம் வெளியிட்டிருக்கிறது.

ராக்பெல்லருக்கு சில ஆண்டுகளுக்கு முன்னல், வாரததிற்கு 80 ஆயிரம் டாலர் டிவிடெண்டு பணம வந்து கொண்டிருந்ததாம். அதாவது, அவர் முதலீடு செய்துள்ள தொழில்களிலிருந்து கிடைக்கும் லாபப் பணம் இவ்வளவு.

இவருக்கு நியூயார்க் நகரத்துக்கு வெளியே 3000 ஏககராவில் ஒரு பங்களா இருக்கிறது.

மற்றும் 4 பெரும் மாளிகைகள் நியூயார்க் நகரில் உள்ளன. இந்த மாளிகைகளில் 1500 கலைப்பொருள்களை வைதது மகிழ்கிறார்.

மொததம் இவருக்கு 25 கோடி டாலர் சொந்த சொத்து உணடு. குடுமபச் சொத்து, டிரஸ்ட் சொதது முதலியன இதில் சேர்க்கப்படவில்லை. ஒரு டாலர் எனபது ரூ. 8 மேனிககு பெருக்கிக் கொள்ளுங்கள்.

## ஊதிய முடக்க சட்டத்தைக் கண்டித்து இரயில்வேத் தொழிலாளர் பழிவாங்கலை எதிர்த்து

# மதுரையில் 'தர்ணா'

மதுரை, ஆக. 29—

ஊதிய முடக்கச் சட்டத்தை வாபஸ்பெறக்கோரியும் இரயில்வேத் தொழிலாளர்கள் பழிவாங்கப்படுவதை எதிர்த்தும் இன்று (வியாழன்) இங்குள்ள இரயில்வே ஜங்ஷன் எதிரில் 'தர்ணா' போராட்டம் நடந்தது.

இங்கு அமைக்கப்பட்டுள்ள அனைத்துத் தொழிற்சங்க ஊதிய முடக்கச் சட்ட எதிர்ப்பு போராட்டக் குழுவின அறைகூவலுக்கு இணங்க நடந்த இந்த தர்ணாவில சிஐடியூ, ஏஐடியூசி சங்கத்தைச் சேர்ந்த ஊழியர்களும இரயில்வேத் தொழிலாளர் போராட்டககுழு மற்றும் மினசாரம், வங்கி, என். ஜி. ஓ, தபால்—தந்தி, ஆயுள் காப்பீட்டுக் கழகம், ஆசிரியர் கூட்டணி, பொதுஇன்சூரன்ஸ், பஞ்சாலை, மோட்டார் தொழிலாளர் சங்கம், அரசுப்போக்குவரத்து, கைநெசவு, மாநகராட்சி மருத்துவமனை ஆகியவற்றைச் சார்ந்த ஊழியர்களுமாக இந்த 'தர்ணா' வில 330 பேர் கலந்து கொண்டனர்.

### சி. ஐ. டி. யூ.

சி. ஐ டி. யூ. தோழர்கள் அனைவரும், இன்று காலை 9 மணிககு டவுன் ஹால் ரோடிலுள்ள மார்கசிஸ்ட் கம்யூனிஸ்ட கட்சி அலுவலகததிலிருந்து மாநில சி. ஐ. டி. யூ. உபதலைவர் ஏ.பாலசுப்ரமணயம,பொருளாளர் விகார்மேகம் ஆகியோர் தலைமையில் — கோரிககை முழககங்களுடன் ஊர்வலமாகப் புறப்பட்டு 'தர்ணா' பந்தலை அடைந்தனர்.

### வாழ்த்து

'தர்ணா' தோழர்களை வாழ்த்தியும் கோரிககைகளை வற்புறுததியும தோழர்கள் ஏ. பாலசுப்ரமண்யம, 'தீக்கதிர்' உதவி ஆசிரியர் ஐ. மாயாண்டி பாரதி, ஏ ஐ டி யூ சி சார்பில் எம். ராமமூர்த்தி, இரயில்வேபோராட்டக்குழு கன்வீனர் எஸ் ராஜரத்தினம் மற்றும் பலர் பேசினார்கள்;

### எம். ஆர். வி.

மார்க்சிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி உறுப்பினர் தோழர் எம். ஆர். வெங்கட்ராமன் 'தர்ணா' தோழர்களைச் சந்திதது வாழ்த்து தெரிவித்து உறசாகமூட்டினர்.

'தர்ணா'தோழர்கள்கோரிக்கைகளை வலியுறுத்தி தொடர்ந்து விண்முட்டும் கோஷங்களை எழுப்பிக் கொணடே இருந்தனர்.

மாலை 6 மணிக்கு வானைப் பிளக்கும்வண்ணம் கோரிக்கை முழக்கம் எழுப்பி ஆர்ப்பாட்டம செய்ததுடன் தர்ணா முடிவுற்றது. பலர் பேசினர்.

## மக்கள் மீது தியேட்டர் முதலாளிகளும் அரசும் கூட்டுத் தாக்குதல்

சென்னை, ஆக. 29—

சினிமாத தியேட்டர் முதலாளிகள் ஒவ்வொரு காட்சிக்கும் குறிப்பிட்ட லெவி சர்க்காருக்கு அளிக்கவேண்டும் என்று,ஸ்டண்ட் அடித்தார் முதலமைச்சர் கருணநிதி. கடைசியில் அம் முதலாளிகளோடு கூடிப் பேசி சினிமா ரசிகர்களின் தலையில் வரியைத் தீட்டிவிட்டார்.

இந்த அடிப்படையில் ஒரு ரூபாய்க்கு குறைவான டிக்கட் மீது 10 காசாக இருந்த கேளிக்கை வரி 15 காசாகிறது. ரூ. 1 முதல் 2 வரையான டிக்கட் மீது கேளிக்கை வரி 20 பைசாவிலிருந்து 30 பைசாவாக உயர்கிறது. ரூ 2 லிருந்து 3வரை உளள டிக்கட மீது இருக்கு 20பைசா கேளிக்கை வரி 40 பைசாவாகும்.

இத்தோடு கூடுதல் சர்சார்ஜ் வேறு விதிககப்படும்.

### சென்னையில்

முதலமைச்சர் முதலில் தெரிவித்த காட்சியொன்றுக்கான லெவி, தற்போது கடுமையாக குறைக்கப்பட்டது.

சென்னை 'குளு குளு' தியேட்டர்களுக்கு விதிககப்பட்ட ரூ.150. லெவி ரூ 27-50 ஆக குறைக்கப்பட்டுள்ளது.

சாதாரண தியேட்டர்களுக்கு ரூ.100-லிருந்து 17-50-க்குக் குறைக்கப்பட்டுள்ளது.

### மதுரையில்

மதுரையில் குளு குளு தியேட்டர்களுககு ஒவ்வொரு காட்சிககும் ரூ. 100 என்றும, சாதாரணதியேட்டர்களுக்கு ரூ. 75 என்றும் கருணநிதியால அறிவிககப்பட்டிருநதது. இப்போது ரூ.17-50 ஆக குறைக்கப்பட்டது.

கோவை, திருச்சி தியேட்

(2-ம் பக்கம் பார்க்க)

...க்கதிர்

# கொள்முதல் விலையை உயர்த்த கூட்டுச்சதி!

நாட்டில் உணவு கிடைக்காத நிலைமையும்—கிடைத்தாலும் மக்களால் வாங்க முடியாத அளவுக்கு விலைவாசிகள் உயர்ந்துள்ள பயங்கரமான நிலைமையும் இருக்கக்கூடிய பின்னணியில்— 'பட்டினி கிடந்து சாக மாட்டோம்! பதுக்கலை எடுத்து பகிர்ந்து உண்போம்!"—என்று போராட்ட அலைகள் ஓங்கி வீசிக்கொண்டிருக்கும் பின்னணியில்— அடுத்து வரும் செப்டம்பர் கடைசியில் மாநில முதலமைச்சர்களின் மாநாட்டை புதுடெல்லியில் கூட்டப்போகிறார்கள் விவசாய ராஜாங்க மந்திரி ஏ. பி. ஷிண்டே 100 லட்சம் டன் முதல் 120 லட்சம் டன்வரை, அடுத்து வரும் குறுவை அறுவடையில் அரசாங்கமே கொள்முதல் செய்ய உத்தேசித்திருப்பதாகவும் அறிவித்து உள்ளது.

ஆனால், என்ன விலை கொடுத்து கொள்முதல் செய்யப்படும் என்பதை மந்திரி இன்னும் அறிவிக்க வில்லை. அது சம்பந்தமான கேள்விகள் எழுந்தபோது,நிலக்காரர்களுக்கு ஊக்கமூட்டும் விலையாகத்தான் இருக்கும் என்று கூறியுள்ளார்.

ஊக்கமூட்டும் விலை கொடுக்கப்படும் என்று மந்திரி தெரிவித்திருப்பதாலும்— இந்த ஊக்கமூட்டும் விலைகளெல்லாம் கொள்ளைலாப விலையாகவே இருந்திருக்கிறது என்பது கடந்தகால வரலாறாக இருந்திருப்பதாலும், இப்பொழுது நடைபெறவிருக்கும் முதலமைச்சர்களின் மாநாடு, ஒரு சதிகாரர்களின் மாநாடாகவே விளங்கும் என்பதை எளிதில் ஊகிக்க முடியும்.

குறுவைக் கொள்முதல் விலையை அதிகரிக்க, கூட்டுச் சதி நடக்கிறது.

இப்பொழுதே கொள்முதல் தானியத்துக்கு சர்வதேச விலை கொடுக்கவேண்டுமென்று நிலப்பிரபுக்களின் ஏஜெண்டுகள் வற்புறுத்த ஆரம்பித்துவிட்டார்கள். இன்னும் சிலர், கிட்டத்தட்ட பகிரங்க மார்க்கெட் விலை அளவுக்கு நெருக்கிக் கொடுக்க வேண்டுமென்றும் நெருக்கி வருகிறார்கள்.

ஆரம்பத்தில், நிலப்பிரபுக்களுக்கு எதிராகப் பேசுவது போலவும்— பொதுமக்களுக்கு ஆதரவாகப் பேசுவது போலவும் மந்திரிகள் நாடகமாடுவார்கள்.

கடைசி முடிவு எடுக்கும்போது, எவ்வளவு கொள்ளை லாப விலையை நிர்ணயிக்க வேண்டுமோ, அவ்வளவு நிர்ணயித்து, கஜானா பணத்தை வாரி இறைப்பார்கள். இதுதான் காங்கிரஸ் மந்திரிகளின் வழக்கமான தந்திரம்,

உண்மையில் மக்களைப் பாதுகாக்கும் நோக்கம் சிறிதளவாவது ஆட்சியாளர்களுக்கு இருக்குமேயானால்—மக்களால் வாங்கக்கூடிய அளவுக்கு — அதாவது, பட்டணம் படிக்கு ஒரு படி அரிசி ரூ. 2 மேனிக்கும் அல்லது 1 கிலோ அரிசி ரூ. 1 மேனிக்கும் — அது போன்றே கோதுமையும் மலிவான விலைக்கு விற்கப்பட வேண்டும். இந்த விலைக்குக் கிடைக்கத்தக்க விதத்தில் இருப்பதற்கு எந்த அளவு கொள்முதல் விலை வைக்க வேண்டுமோ அந்த அளவு வைக்கப்பட வேண்டும்.

நிலப்பிரபுக்களின் கட்சியான காங்கிரஸ் கட்சியும், அதன் அரசும ஏழைமக்களுக்கு அனுகூலமாக நடக்குமென்று எப்படி எதிர்பார்க்கமுடியும்?

---

## 10 ஏக்கருக்குமேல் நிலமுள்ளோரிடமிருந்து

# பணக்கூலி வாங்குவதில்லை

## தஞ்சை விவசாயத் தொழிலாளர் சங்கம் முடிவு

திருவாரூர். ஆக. 30—

10 ஏக்கருக்கு மேல் நிலம் வைத்துள்ளோரிடம் பணக்கூலி வாங்காமல் நெல்லையே கூலியாக வாங்குவதென்று திருவாரூரில் தோழர் பி. எஸ். தனுஷ்கோடி தலைமையில் கூடிய தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர் சங்கம் முடிவெடுத்துள்ளது.

தீர்மானத்தில் கூறப்பட்டிருப்பதாவது:—

பத்துஏக்கரோ அதற்கு மேலோ ஒரு குடும்பத்தில நிலம் வைத்துள்ள நிலச்சுவான்தார்களிடம பணக்கூலியே வாங்குவதில்லை. 22 7. 74ம் தேதிய தஞ்சை ஒப்பந்தப்படியுள்ள 6 லிட்டர் நெல்லுடன் கூடிய ரூ 2. 75 என்ற கூலியைத்தான் வாங்க வேண்டும். இதற்காக போராட்டம் நடத்த வேண்டியது வந்தால் உறுதியான போராட்டமும் நடத்த வேண்டும்.

ஒரு குடும்பத்தில் 10 ஏக்கருக்குக் குறைவாக உள்ள நிலச்சுவான்தார்களிடமும், சாகுபடியாளர்களிடமும் உண்மையிலேயே நெல் இல்லாதவர்களிடமும் மட்டும் பணக்கூலி வாங்கப்படும். [அந்தப் பணக்கூலி இன்றைய மார்க்கெட் விலையில் 1 மூட்டை ரூ. 100 என்ற அடிப்படையில்]

---

## ஆற்காடு சுகாதார தொழிலாளர்கள்

# ஸ்டிரைக்

ஆற்காடு. ஆக. 28—

ஆற்காடு நகராட்சி சுகாதாரத் தொழிலாளர்கள் சென்ற 20-ம தேதி ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம செய்தனர்.

மாதா மாதம் முறையாக சோப் கொடுக்காததைக் கண்டித்தும், மட்டமான செருப்பு கொடுக்கப்படுவதை எதிர்த்தும். மேஸ்திரி வேலைக்கு தொழிலாளர்களிடையேயிருந்து சீனியாரிட்டி முறைப்படி தேர்வு செய்யக் கோரியும் இந்த வேலை நிறுத்தம் நடந்தது.

ஆணையாளர், நகராட்சி தலைவர் ஆகியோர், தொழிலாளர்களின் கோரிக்கைகளை உடனடியாக கவனிப்பதாக உறுதியளித்துள்ளனர்.

---

# சேரனில் ரூ. 45 லட்சம் லாபம்

கோவை, ஆக. 28—

தொழிலாளர்களுடைய குறைகளைத் தீர்க்குமாறு கோருகின்ற காலத்திலெல்லாம், லாபமில்லையென்றும், நட்டத்திலேயே ஓடுவதாகவும் கூறி, தொழிலாளர் உரிமைப் போராட்டங்களை அடக்கி ஒடுக்கி வருகிறது, தமிழக அரசு.

ஆனால் உண்மை நிலைமை என்ன?

1974 மார்ச் 31-ம் தேதியோடு முடிவான ஒரு வருடத்தில் மட்டும், மேற்குப் பகுதியில் ஓடும் சேரன் போக்குவரத்துக் கழகத்தில் ரூ 45 லட்சத்து 21 ஆயிரம் ரூபாய் நிகரலாபம் கிடைத்திருக்கிறது.

1973—74-ல் வருமானம் ரூ. 451 லட்சத்து 90 ஆயிரம் மொத்தச்செலவு ரூ. 406 லட்சத்து 69 ஆயிரம் லாபம் ரூ. 45 லட்சத்து 21 ஆயிரம் என்று அதிகாரபூர்வமாக அறிவிக்கப்படுகிறது.

---

## மின்வாரியத்தில்

# திருட்டும் சேதமும்

## அமைச்சர் ஒப்புதல்

சென்னை, ஆக. 28—

தமிழக மின்வாரியத்தில் திருட்டும்சேதமும் இருப்பதுஉண்மையே என்று மின்துறை அமைச்சர் ஓ. பி. ராமன் ஒப்புக் கொண்டார்.

மின்வாரிய நிதி நிலை அறிக்கை மீது நடந்த விவாதத்திற்கு பதிலளிக்கையில் இந்த உண்மையை அவர் ஒப்புக் கொண்டார்.

இந்ததிருட்டையும்,சேதத்தையும் சமாளிக்க உரிய நடவடிக்கைகள் எடுக்கப்படுவதாகவும்,திடீர்சோதனைகள் நடத்தப்படுவதாகவும் அவர் கூறினார்.

---

# துணை ஜனாதிபதி தேர்தல் முடிவு

புதுடெல்லி, ஆக. 28—

கடந்த செவ்வாய்க் கிழமையன்று நடந்த இந்தியஉபஜனாதிபதி தேர்தலில், நடந்த நேரடிப போட்டியில், பி. டி. ஜாட்டி தேர்ந்தெடுக்கப்பட்டார் இந்திரா காங்கிரஸ் வேட்பாளரான இவர் 521 ஓட்டுகள் பெற்றார்.

இத் தேர்தலில் மார்க்சிஸ்ட், சோசலிஸ்ட் மற்றும் எதிர்க்கட்சிகளின் வேட்பாளராகப் போட்டியிட்ட ஹோரோ 141 ஓட்டுகள் பெற்றார். பி.டி.ஜாட்டி இந்தியாவின 6-வது துணை ஜனாதிபதி ஆவார்.

### ஜனாதிபதி

கடந்த 24-ந் தேதி நடந்த இந்திய ஜனாதிபதிதேர்தலில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் பக்ருதீன் அலி அகமது 7,65 587 வாக்குகள் பெற்று வெற்றி பெற்றார். மார்க்சிஸ்ட், சோசலிஸ்ட் மற்றும் எதிர்க் கட்சிகளின் வேட்பாளராகப் போட்டியிட்ட திரிதீப்குமார்சவுத்திரி 1,89,196 வாக்குகள் பெற்றார்.

கேரளத்தில், பக்ருதீனை விட அதிக ஓட்டுகள் சௌத்ரிககு கிடைத்தது.

---

## கலெக்டர் முன்பு ஏற்பட்ட

# ஒப்பந்தத்தை மீறும் மிராசுதார்கள்

திருவாரூர், ஆக, 29—

மன்னைத் தாலுகா தேவங்குடியில் கடந்த 22—7—74ல் தஞ்சையில் கலெக்டர் முன்னிலையில் ஏற்பட்ட உடன்பாட்டினைக் காலில் போட்டு மிதித்து வருகின்றனர், மிராசுதார்கள். அவ்வொப்பந்தத்தில் ஒப்புக் கொண்டபடி கூலியாக நெல்லும் பணமும் தருவதற்கு, தற்போது மறுத்து வருகின்றனர்.

மிராசுதார்களின் இந்தப் பிடிவாதம் குறித்து,அதிகாரிகள் முன்னிலையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட், இந்திய கம்யூனிஸ்ட் ஆகிய கட்சித் தலைவர்களுக்கும் மிராசுதார்களுக்குமிடையில் நடந்த பேச்சுவார்த்தையில், நெல்லும் பணமும் கூலியாகத் தருவதற்கு ஒப்புக் கொண்டனர். ஆனால் அடுத்த நாளே அந்தஉடன்பாட்டை மீறியதுமல்லாமல், வெளியூர்களிலிருந்து ஆட்களை இறக்குமதி செய்து, உள்ளூர் ஆட்களுக்கு வேலை கொடுக்க மறுத்து வருகின்றனர்.

### ஏ. நடராசன் வற்புறுத்தல்

நிலைமை இப்படி இருக்கும் போது கூலி ஒப்பந்தம் ஏற்பட்டு தேவாங்குடியில் அமைதியாக வேலை நடைபெற்று வருவதாக 27.8 74ந் தேதிய 'தினமல'ரில் செய்தி வந்துள்ளது.

இச்செய்தியை விவசாய தொழிலாளர் தலைவர் தோழர் ஏ. நடராஜன் மறுத்துள்ளார்.

ஏற்றுக் கொண்டுள்ள ஒப்பந்தத்தை அமுல்படுத்தவும்—வெளியூர் ஆட்கள் இறக்குமதி செய்யப்படுவதை நிறுத்தி உள்ளூர் தொழிலாளர்களுக்கு வேலையும்—கூலியாக நெல்லும், பணமும் அளிக்கவும் உரிய ஏற்பாடு செய்ய வேண்டும் என்று அதிகாரிகளை வற்புறுத்தியுள்ளார்.

---

## காட்டூரில்

## விவசாய தொழிலாளர் கூலி உயர்வு

# வேலைநிறுத்தம்வெற்றி

பொன்னேரி, ஆக. 30—

பொன்னேரிவட்டம் காட்டூரில் விவசாயத் தொழிலாளர்கள் கூலி உயர்வு கோரி இரண்டு நாட்கள் கட்டுப்பாடுடன் வேலைநிறுத்தம் செய்து வந்தார்கள்.

விவசாயத் தொழிலாளர்கள் கட்டுப்பாடாக வேலை நிறுத்தம் செய்வதைக்கண்ட மிராசுதார்கள் விவசாய சங்கத்துடன் பேச்சு வார்த்தைக்கு வந்தார்கள்.

பிறகு இரண்டு தரப்பினர்களும் கூடிப் பேசிய பின் ஆணுக்கும், பெண்ணுக்கும் ரூ1 தினக்கூலி உயர்வு கொடுக்க மிராசுதார்கள் ஒத்துக் கொண்டனர்.

காலைமேணிக்கு வேலைக்கு வந்தால் தினம் இரண்டு வேளைசாப்பாடும், 9மணிக்கு வேலைக்கு வந்தால் ஒரு வேளை சாப்பாடு போடுவதாகவும் ஒப்புக் கொள்ளப் பட்டது.

மாதக் கணக்கில் வேலை செய்யும பண்ணை ஆளுக்கு தினம் இரண்டு வேளை சாப்பாடும், மாதம் பட்டணம் படியில் 8 படி கொண்ட மரக்காலில் 5½ மரக்கால் கொடுக்கப்பட்டு வருகிறது.

---

## வரிப் பணம் கையாடல்

# கிராம அதிகாரி தலைமறைவு?

## கைது செய்யப்பட்டதாக பொய்ச்செய்தி

மேட்டூர், ஆக. 29—

மக்களின் வரிப்பணத்தை கையாடல் செய்ததாக இத் தாலுகாவைச் சேர்ந்த வீரக்கலபுதூர், பி. என். பட்டி கிராம அதிகாரியாக வேலை பார்த்த கே. சி. கலைக்கோவன் மீது குற்றம் சாட்டப்பட்டு வேலையிலிருந்து நீக்கப்பட்டாராம். ஆனால இவர் இதுவரை கைது செய்யப்படவில்லை.

ஆனால், கடந்த 4-8-74ந் தேதிய 'தினத்தந்தி'பத்திரிக்கையில், அரசுப்பணத்தை கையாடல செய்திருப்பதாக மேட்டூர் உதவி கலெக்டர், தாசில்தார் ஆகியோரால் நிரூபிக்கப்பட்டு, மேற்படி கிராம அதிகாரி கலைக்கோவன் போலீசாரால் கைது செய்யப்பட்டிருப்பதாக செய்தி வெளியாகியுள்ளது. ஆனால், உண்மையில் அவர் இதுவரை கைது செய்யப்படவில்லையாம். மாறாக அவர் வேலை நீக்கம் செய்யப்பட்ட 1—7—74 முதல் ஸ்தலத்தில் இல்லை என்றும் சென்னையில் நண்பர் ஒருவர் வீட்டில் இருந்ததாகவும் சொல்லப்படுகிறது.

கடந்த 10—10—73ந் தேதி கிராம அதிகாரியைக் குறை கூறிப் பேசியதாக கிராம அதிகாரி, மற்றும் தாசில்தார் ஆகியோர் கொடுத்த புகாரின் பேரில் — மார்க்சிஸ்ட் கட்சியைச் சேர்ந்த தோழர் வேல்முருகன் உட்பட அவரது குடும்பத்தைச் சார்ந்த 7பேர் மீது வழக்குத் தொடுத்த போலீசார், இப்போது வரிப் பணத்தை கையாடல் செய்தவரைக் கைது செய்யாமல் இருப்பது குறித்து அதிருப்தி ஏற்பட்டுள்ளது.

---

## ஆசிரியருக்கு...

# பொதுப்பணித்துறைஅதிகாரிகள் கவனிப்பார்களா?

ஐயா,

கடந்த 27 ஆண்டுகளாக பல மனுக்கள் அனுப்பிகலெக்டரை வழிமறித்து போராடிய பின்னர் கண்மாயிலிருந்து கடந்தஆண்டு வாய்க்கால் வெட்டப்பட்டது. வாய்க்கால் வெட்டும் வரை வாய்க்கால் இல்லையேஎன்ற ஏக்கம், ஆனால் இப்போது வாய்க்கால் வெட்டியும் பிரயோசனம் இல்லையே என்ற வருத்தம். கடந்த ஆண்டு அறுபது ஆயிரம் ரூபாய் செலவழித்தும் உருப்படியான காரியமில்லை.

ஆனால், வாய்க்கால் தளமும் சமமாக உள்ளது. மணல் வாரி மட்டும் இரண்டுக்கும் கீழ்பகுதியில் உள்ளது. இதனல் மணல் வாரி வேலையே செய்வதில்லை. இதை சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு தகவல் கொடுத்தும், கடந்த 3—7—74ம்நாள் கன்னியப்பபிள்ளைபட்டி ஊராட்சிமன்ற அலுவலக கட்டிடத் திறப்பு விழாவிற்கு வந்திருந்த மாவட்ட ஆட்சித்தலைவர் அவர்களிடம் மனுகொடுத்தும் எவ்வித பிரயோசனமும் இல்லை மேற்படி கண்மாய் பெருகுவதால் சுமார் 5 மைல் சுற்றளவிலுள்ள கிணறுகளுக்கு தண்ணீர் கிடைக்கும், விவசாயிகளுடைய கஷ்டம் தீரும். ஆகவே, இது குறித்து விவசாயத்தில் தனிக்கவனம் சம்பந்தப்பட்ட பொது வேலைத்துறை அதிகாரிகள் செலுத்துவார்களா? உடனடி நடவடிக்கை எடுப்பார்களா?

தோழமையுள்ள,

**வி. நடராசன்,**

மார்க்சீய கம்யூனிஸ்ட் கட்சி

கன்னியப்பபிள்ளைபட்டி.

---

## ரயில்வே தொழிலாளர் மீது பழிவாங்கும் போக்கை கைவிடுக பட்டதாரி ஆசிரியர்

# கோரிக்கை

தக்கலை. ஆக. 28—

கடந்த மே மாதம் நடந்த இரயில்வே ஊழியர்கள் போராட்டத்தையொட்டி மத்திய அரசு மேற்கொண்டு வரும் பழிவாங்கும் நடவடிக்கைகளை ரத்துச் செய்ய வேண்டும்என்று இங்குள்ள பட்டதாரி ஆசிரியர் சங்க கிளைச் செயலாளர் கூட்டத்தில் இதுகுறித்து தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது.

மேலும், வேலை நீக்கம் செய்யபபட்டதை எதிர்த்து நாகர்கோவில் கலெக்டர் அலுவலகம் முன்பு சத்தியாக்கிரகம் நடத்தும் பட்டதாரி ஆசிரியர் திரு. ஞானமுத்தனுக்கு ஆதரவு தெரிவிக்கபபட்டது.

---

## ஊதிய முடக்கத்துக்கு

# கண்டனம்

ஈரோடு, ஆக 28—

மத்திய அரசின் ஊதிய முடக்கச் சட்டத்துக்கு ஈரோடு தாலுகா சுருட்டுத் தொழிலாளர் சங்கம் (சி ஐ. டி. யூ.) எதிர்ப்பு தெரிவித்துள்ளது.

அச்சட்டத்தை வாபஸ் பெறும்படி, வற்புறுத்தும் தீர்மானம் ஒன்றும் கடந்த 26-ந் தேதி நடந்த விசேஷ மகா சபைக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது.

இக் கூட்டத்துக்கு எம். தம்பண்ணன் தலைமை வகித்தார்.

புதிய நிர்வாகிகளாக எம். என், காளியண்ணன் (தலைவர்) இ எம். சுப்பையா (உப தலைவர்] எஸ். தம்பண்ணன் (செயலாளர்) கே. துரைராஜ் [உதவிச் செயலாளர்) கே. கருப்பணன் [பொருளாளர்) ஆகியோரும் மற்றும் நிர்வாகக் குழு உறுப்பினர்களாக ஏ. மாரிமுத்து, மைதீன் பாட்சா,எம் சின்னப்பன், ஏ. பாபு என். நல்லப்பன், ஆயாத்கான், எம் மாரப்பன், ஆலிசாபாஸ் ஆகியோரும் தேர்ந்தெடுக்கபபட்டனர்.

---

# மின்ஊழியர் தர்ணா

ராஜபாளையம், ஆக29—

தமிழ்நாடு மின் வாரியத் தொழிலாளர் மத்திய அமைப்பின் முடிவிற்கிணங்க 20—8—74 அன்று இராஜபாளையம கோட்ட மின பொறியாளர் அலுவலகத்திற்கு முன் 1மணி நேரம் தர்ணா போராட்டமும். அன்று காலை 11 மணியிலிருந்து 5 மணிவரை ராஜபாளையம் தாலுகா அலுவலகத்திற்கு முனபும் தர்ணாவும நடந்தது.

இந்த தர்ணா போராட்டத்தில சுமார் 120 பேருக்கும், மேலானவர்கள் கலந்து கொண்டார்கள். தர்ணாவிற்கு முன்பு ராஜபாளையம உப- மின் நிலையத்தில் இருந்து ஊர்வலம புறப்பட்டது. ஊர்வலத்திற்குதோழர்எஸ்.ராமையா தலைமை வகித்தார்.

### வந்தவாசி

வந்தவாசியில் நடந்த தர்ணாவில் வந்தவாசி, செய்யாறு பகுதி ஊழியர்கள் கலந்து கொண்டனர் ஓட்டல் தொழிலாளர்களும் ஆதரவு தெரிவித்து தர்ணா நடத்தினர்.

---

# புது நிர்வாகிகள்

பவானி, ஆக. 30—

அகில இந்திய அஞ்சல் ஊழியர்கள் (மூன்றும் பிரிவு) சங்க பவானி கிளை நிர்வாகிகளாக கீழ்க்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவர்-வி. கந்தசுப்ரமணியம், செயலாளர், சி. நடராசன், பொருளாளர்,சி. ரங்கசாமி,

---

## சென்ற ஆண்டைவிட இந்த ஆண்டில்

# விளைச்சல் அதிகம்

## மந்திரி ஷிண்டே அறிவிக்கிறார்

புதுடில்லி, ஆக. 29—

நாட்டில் உணவு நிலைமை படுமோசமாக இருப்பதைப் பற்றி ராஜ்ய சபையில் விவாதம் வந்தது. மக்களுக்கு உணவு கிடைக்கக்கூடிய முறையில் அரசின் கொள்கை அமையாவிட்டால், கலவரம் மட்டுமல்ல, புரட்சியே நடக்கும் என்று பலரும் எச்சரித்தார்கள்!

அதற்கு விவசாய ராஜாங்க மந்திரி ஏ.பி. ஷிண்டே பதில் அளிக்கையில், "அங்கத்தினர்கள்வீண் பீதியைக் கிளப்ப வேண்டா மென்றும், சென்ற ஆண்டில் கண்டு முதலான விளைச்சலைக் காட்டிலும், இந்த ஆண்டில் கூடுதல் விளைச்சல் ஆகியிருக்கிறது. அதாவது, 70 லட்சம் டன் முதல் 90 லட்சம் டன் வரை கூடுதலாக விளைந்திருக்கிறது"—என்று கூறினார்.

உணவு இருக்குது நாட்டிலே — ஒன்றுமே இல்லை ஏழையர் வீட்டிலே! காரணம், பதுக்கல்!—இந்தப் பதுக்கலை வெளிப்படுத்தி, பட்டினிச் சாவைத் தவிர்த்திடுவது பற்றி மந்திரி மூச்சே விடவில்லை.

ஆம், ஷிண்டேயும் மூச்சுவிடமாட்டார். பிரதமர் இந்திராவும் மூச்சுவிட மாட்டார்.

காரணம், அந்த நிலப்பிரபுக்களும், பதுக்கல் கும்பலும் தான், காங்கிரஸ் கட்சியின் முதுகெலும்பாக இருக்கிறார்கள்.

ரொம்ப தூரம் போவானேன். பெரும்பாலான காங்கிரஸ் எம்.எல்.ஏ.களும், எம். பி. களும் நிலப்பிரபுக்களே. அரசாங்கத்துக்குக் கொடுக்க வேண்டிய லெவி தானியத்தைக் கூட இவர்கள் கொடுக்க மறுத்தனர் என்பது ஊர் அறிந்த சமாச்சாரம் தானே!

---

# அரிசி என்ற பெயரில்...

வேலூர், ஆக. 29—

இங்குள்ள கற்பகம் கூட்டுறவு சிறப்பு அங்காடியில் தவிடு, உமி, கல முதலியன தாராளமாகக் கலக்கப்பட்ட அரிசி வழங்கபபடுகிறது.

கடந்த 25ந் தேதியன்று இங்கு விநியோகிக்கபபட்ட அரிசி ஓலை நொய்யாகவும் பழுப்பு நிறமாகவும், மக்கிப் போயும் இருக்கினறது. துர்நாற்றம் வேறு.

ஒரு குடும்பக் கார்டுக்கு 5கிலோ வீதம வழங்கபபடும் இந்த மோசமான அரிசி விலை கிலோ ரூ 2-20 ஆகும்.

உண்பதற்கு லாயக்கற்ற அரிசியை கூட்டுறவு சிறப்பு அங்காடிகளில் விற்று கொள்ளை லாபம் அடிப்பதைக கண்டு இவ்வட்டார மக்கள் கொதிப்படைந்துள்ளனர்.

படி அரிசிரூ2க்கு கேட்கும் போது கிலோ ரூ 2-20க்கு அதுவும் மக்கிப் போன — நாற்றம அடிக்கும் அரிசி போடுவதா என்று கோபாவேசமடைந்துள்ளனர்.

---

# அமைச்சரின் பரிதாபநிலை

புதுடெல்லி, ஆக. 28—

கேள்வியொன்றுக்கு பதில் அளிக்கையில, மத்திய ராஜாங்க உணவு அமைச்சர் ஷிண்டே அரசாங்கத்தின் புதிய கோதுமைக் கொள்கையின் காரணமாக கோதுமை விலையை குறைக்க முடிந்துள்ளது என்று மனமார பொய்யை உண்மைபோல் அடித்து கூறிவிட்டார்.

மற்றொரு கேள்விக்கு பதில அளிக்கும போது கோதுமை, அரிசி ஆகியவைகளின் விலைகள் நாடு முழுவதும உயர்ந்துவிட்டன என தன்னையும் மறந்து உண்மையை கூறிவிட்டார்.

தான் உண்மையைக் கூறுயபோது கோதுமையும் அரிசியும் விலையும் முக்கியமான பகுதிகளில் கடந்த மூன்று மாதங்களில் மொத்த வியாபார விலை உயர்வு அதிகரித்துள்ளது என்றும் கூறிவிட்டார்.

அமைச்சரின் நிலை பரிதாபமாகப போய்விட்டது.

---

## மக்கள் மீது......

1-ம் பக்கத் தொடர்ச்சி

டர்கள் ரூ.10வீதம் செலுத்த வேண்டும்.

ஏனைய நகரத் தியேட்டர்கள் ரூ.7-50 கட்ட வேண்டும்.

சிற்றூர்களில் உள்ள தியேட்டர்கள் ரூ.5 கட்ட வேண்டும்.

சினிமா முதலாளிகள்மீது லெவி விதிக்கப் போவதாக ஸ்டண்ட் அடித்தார் கருணாநிதி. பின்பு தியேட்டர் முதலாளிகளும். முதல் அமைச்சர்களும் கூடிப்பேசி டிக்கட் மீது ஏற்றி விட்டனர்.

---

## விலைவாசி உயர்வுக்கு

# வாலிபர் முன்னணி கண்டனம்

கடையம், ஆக. 29—

விலைவாசி உயர்வை எதிர்த்து, வள்ளியம்மாள் புரம வட்டார வாலிபர் முன்னணி சார்பாக கடந்த 22-ந் தேதியன்று பொதுக் கூட்டம் கே. ஆறுமுகம் தலைமையில் நடந்தது.

தோழர்கள பி சொரணம், வழக்கறிஞர் ஆர். கிருஷ்ணன், பி.திருஞானசம்பந்தன், எஸ்.ராஜாங்கம் ஆகியோர் பேசினர்.

---

# காங்கிரஸ் கட்சியின் குண்டர் படைகள்

புதுடெல்லி, ஆக. 28—

இடதுசாரி ஜனநாயக சக்திகளை அழித்தொழிப்பதற்காகவே பாசிச சக்தியாக இந்திராபடை என்றும் நேரு படை என்றும் குண்டர் படைகள் பல்வேறு மாநிலங்களில் உருவெடுத்து விட்டன.

இந்திராப்படை நேரு படை போன்ற தனி அமைப்புகளையும் அவைகளின் நடவடிக்கைகளையும் தடை செய்ய எந்தச் சட்டமும் இல்லையாம். உள்நாட்டு துணை அமைச்சர் இதனை தெரிவித்தார்.

மேலும் தோழர் ஜோதிர்மாய்பாசு கேட்ட கேள்வி ஒன்றுக்கு பதில் அளித்த அவ்வமைச்சர் காங்கிரசுக் கட்சியினைச் சேர்ந்தஇந்திரா படைகளும், நேரு படைகளும் ஆந்திரா, பீகார், குஜராத், கர்னடகா, மகாராஷ்டிரா. உத்திரப் பிரதேசம், டெல்லி ஆகிய மாநிலங்களில் உள்ளன என்பதையும் தெரிவித்தார்.

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 [illegible] ரோடு மதுரை,625018) அச்சிட்டு வெளியிடுவர் ஆசிரியர் கே. முத்தையா